| பண்டம் | அடி ஆண்டு | | பண்டம் | | $P_o q_o$ | $P_o q_n$ | $P_n q_o$ | $P_n q_n$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| | விலை $P_o$ | பெறுமானம் தொகை $q_o$ | விலை $P_n$ | பெறுமானம் தொகை $q_n$ | | | | |
| A | 6 | 50 | 10 | 56 | 300 | 336 | 500 | 560 |
| B | 4 | 60 | 6 | 60 | 240 | 240 | 360 | 360 |
| C | 2 | 100 | 2 | 120 | 200 | 240 | 200 | 240 |
| D | 8 | 40 | 12 | 80 | 320 | 640 | 480 | 960 |
| E | 10 | 30 | 12 | 24 | 300 | 240 | 360 | 288 |
| | | | | | 1360 | 1696 | 1900 | 2408 |

i. இலாஸ்பியரின் விலைச் சுட்டெண்

$$LP_{n/o} = \frac{\sum P_n q_0}{\sum P_o q_o} \times 100$$

$$LP_{n/o} = \frac{1900}{1360} \times 100$$

$$LP_{n/o} = 139.7$$

ii. பாசேயின் விலைச் சுட்டெண்

$$PP_{n/o} = \frac{\sum P_n q_n}{\sum P_o q_n} \times 100$$

$$PP_{n/o} = \frac{2408}{1696} \times 100$$

$$LP_{n/o} = 141.98$$

$$LP_{n/o} = 142$$

iii. பிசரின் விலைச் சுட்டெண்

$$FP_{n/o} = \sqrt{LP_{n/o} \times PP_{n/o}}$$

$$FP_{n/o} = \sqrt{139.7 \times 141.9}$$

$$FP_{n/o} = 14079$$

$$FP_{n/o} = 140.8$$

iv.

| $P_o(q_o+q_n)$ | $P_n(q_o+q_n)$ |
|---|---|
| 636 | 1060 |
| 480 | 720 |
| 440 | 440 |
| 960 | 1440 |
| 540 | 648 |
| 3056 | 4308 |

மார்சல் எஜ்வர்த்தின் விலைச் சுட்டெண்

$$M_EP_{n/0} = \frac{\sum P_n\left(\frac{q_0+q_n}{2}\right)}{\sum Po\left(\frac{q_0+q_n}{2}\right)}\times 100$$

$$M_EP_{n/0} = \frac{\sum P_n(q_0+q_n)}{\sum P_o(q_0+q_n)}\times 100$$

$$M_EP_{n/0} = \frac{4308}{3056}\times 100$$

$$M_EP_{n/0} = 140.96$$

$$M_EP_{n/0} = 141$$

**காலப் புறமாற்றுச் சோதனை**

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = \frac{\sum P_n(q_0+q_n)}{\sum P_o(q_0+q_n)}\times\frac{\sum P_o(q_0+q_n)}{\sum P_n(q_0+q_n)}$$

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = \frac{4308}{3056}\times\frac{3056}{4308}$$

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = 1$$

காலபுறமாற்று சோதனையை இச்சுட்டெண் திருப்தி செய்கின்றது.

**காரணி புறமாற்றுச் சோதனை**

விலை சுட்டி ,தொகை சுட்டி என்பவற்றின் பெருக்கம் அவை தொடர்பான பெறுமதி சுட்டிக்கு சமமாக இருப்பின் காரணி புறமாற்று சோதனை திருப்தி செய்யப்படுகின்றது.

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = \frac{\sum P_n(q_0+q_n)}{\sum P_o(q_0+q_n)}\times\frac{\sum P_o(q_0+q_n)}{\sum P_n(q_0+q_n)}$$

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = \frac{4308}{3056}\times\frac{4104}{3260}$$

$$M_EP_{n/0}\times M_EP_{o/n} = 1.7746$$

$$MEP\times MEQ = MEV$$

**பெறுமதிச் சுட்டி**

$$V_{n/o} = \frac{\sum P_nq_n}{\sum P_oq_o}\times 100$$

$$V_{n/o} = \frac{2408}{1360}\times 100$$

$$V_{n/o} = 1.7705$$

ஆகவே காரணி புறமாற்றுச் சோதனையை இச் சுட்டெண் திருப்திப்படுத்தவில்லை.

(இ) காலத்தொடர் என்றால் என்ன?
வணிகத்துறையில் காலத்தொடர் பகுப்பாய்வின் **மூன்று** பயன்பாடுகளை விபரிக்குக.
காலத்தொடர் பகுப்பாய்வில் சுழற்சி மாறல், பருவகால மாறல் என்பவற்றின் மூலம் கருதப்படுவது யாது என விபரிக்குக. (05 புள்ளிகள்

**காலத்தொடர்**

காலத்தை அடிப்படையாகக் கொண்ட மாறி ஒன்று சமமான கால இடைவெளிகளில் குறிப்பிட்ட காலத்தில் அவதானிக்கப்பட்ட பெறுமானங்களின் தொகுதியே ஒரு காலத் தொடர் எனப்படும்.

உதாரணம் : $y_1, y_2, ..........................\ y_T$

**பயன்பாடுகள்**

1. ஒரு மாறியின் கடந்த கால நடத்தையினை அறிந்து கொள்வதற்கு
2. குறித்த மாறியின் கடந்தகால தரவுகளின் அடிப்படையில் எதிர்கால நடத்தையினை எதிர்வு கூறுவதற்கு
3. வேறுபட்ட நிறுவனங்களின் குறித்த மாறியின் போக்கினை ஒப்பிடுவதற்கு
4. இரண்டுக்கு மேற்பட்ட மாறிகளின் போக்கினை ஒப்பிடல்.

**சுழற்சி மாறல்**

ஒரு காலத் தொடர் மாறியின் நீண்ட காலப் போக்கினை ஒரு வருடத்திற்கு அதிகமான காலத்தில் ஏற்படும் ஒழுங்கான மாறல்களை குறிக்கும். இது கட்டங்களாக சீரற்றுப் பரம்பியிருக்கும்.

உதாரணம் :

வியாபார சுழற்சி : மந்தம், செழிப்பு என்பவற்றைப் பிரதிபலிக்கும்.

**பருவகால மாறல்**

ஒரு காலத்தொடர் மாறி ஒரு வருட காலத்தினுள் சமகால இடைவெளிகளில் திரும்பத் திரும்ப இடம் பெறும் மாறல்கள் இது நாளாந்த, மாதாந்த அல்லது காலாண்டு முறைகளில் நிகழும்.

உதாரணம் : மழைக்காலம்.

(ஈ) ஆடை விற்பனையிற்காக இழிவு வர்க்க முறை மூலம் பொருத்தப்பட்ட போக்குச் சமன்பாடு கீழே தரப்படுகின்றது.

$$Y = 840 + 72X$$

ஆரம்ப ஆண்டு 2005, கால அலகு = 1 வருடம்

$Y =$ தலா வருடத்திற்கான விற்பனை அலகுகளின் எண்ணிக்கை

(i) இப் போக்கு சமன்பாட்டினை மாதாந்த போக்குச் சமன்பாட்டிற்கு மாற்றுக.
(ii) 2011 ஆண்டின் ஒக்டோபர் மாதத்திற்கான விற்பனையை மதிப்பிடுக. (05 புள்ளிகள்

(i) வருடாந்த போக்கு சமன்பாடு

$Y = 840 + 72X$ (ஆரம்பப் புள்ளி : 2005)

மாதாந்த போக்கு சமன்பாடு

$$Y = \frac{840}{12} + \frac{72}{144}X$$

$Y = 70 + 0.5X$ (ஆரம்பம் : 2005 யூலை 01)

(ii) ஒக்டோபர் 2011 க்கான விற்பனை : $X = 75.5$

$Y = 70 + 0.5[75.5]$

$Y = 70 + 37.75$

$Y = 107.75$

அல்லது

ஜனவரி 2006 க்கு மாற்றும் போது

$Y = 70 + 0.5[X + 6.5]$

$Y = 70 + 0.5X + 3.25$

$Y = 73.25 + 0.5X$ (ஆரம்பம் : 2006 ஜனவரி 15)

2011 ஒக்டோபர் மாதத்திற்கான விற்பனை : $X = 69$

$Y = 73.25 + 0.5 \times [69]$

$Y = 73.25 + 34.5$

$Y = 107.75$

4. (அ) ஒரு குறிப்பிட்ட கம்பனியின் விற்பனை திணைக்களமானது அதனுடைய விற்பனையாளர்களிற்கு பயிற்சி ஒன்றினை வழங்கி அதன் பின்னர் ஒரு பரீட்சையினை நடத்துகின்றது. பயிற்சியின் பின்னர் விற்பனையாளர்கள் பெற்ற பரீட்சையின் புள்ளிகளையும் விற்பனையின் பெறுமானங்களையும் கீழ்வரும் அட்டவணை தருகின்றது.

| பரீட்சையின் புள்ளிகள் ($X$) | 19 | 24 | 14 | 22 | 26 | 21 | 19 | 20 | 15 | 20 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விற்பனை (ரூபா ஆயிரத்தில்) ($Y$) | 36 | 48 | 31 | 45 | 50 | 37 | 39 | 41 | 33 | 40 |

$\sum X = 200$, $\sum Y = 400$, $\sum X^2 = 4120$, $\sum Y^2 = 16346$, $\sum XY = 8193$

(i) பரீட்சை புள்ளிகளுக்கும் விற்பனை பெறுமானங்களுக்கும் இடையிலான இணைபுக் குணகத்தினைக் கணித்து, அவற்றுக்கு இடையில் தொடர்பு உள்ளதா எனக் கூறுக.

(ii) இழிவு வர்க்கமுறை மூலம் $X$ மீதான $Y$ இன் பிற்செலவு கோட்டினை பொருத்துக.

(iii) துணிதற்குணகத்தினை கணித்து, உமது விடையினை விமர்சிக்குக.

(iv) திணைக்களமானது பரீட்சை புள்ளிகளையும், விற்பனை பெறுமானங்களையும் அடிப்படையாகக் கொண்டு சில விற்பனையாளர்களை நீக்குவதற்கு கருதுகின்றது. திணைக்களம் ஒவ்வொரு விற்பனையாளரிடமும் இருந்து ஆகக் குறைந்த விற்பனை ரூபா. 30 000 இனை எதிர்பார்க்கின்றது எனின், விற்பனையாளர் ஒருவரை நீக்குவதற்கு கருத்தில் கொள்ள வேண்டிய ஆகக்குறைந்த பரீட்சை புள்ளி என்ன? (10 புள்ளிகள்

(i) இணைபுக் குணகம்

$$r = \frac{N\sum XY - (\sum X)(\sum Y)}{\sqrt{N\sum X^2 - (\sum X)^2}.\sqrt{N\sum Y^2 - (\sum Y)^2}}$$

$$r = \frac{10(8193) - (200)(400)}{\sqrt{10(4120) - (200)^2}.\sqrt{10(16346) - (400)^2}}$$

$$r = \frac{81930 - 80000}{\sqrt{[41200 - 40000]}.\sqrt{[163460 - 160000]}}$$

$$r = \frac{1930}{\sqrt{1200}\sqrt{3460}}$$

$$r = \frac{1930}{2037.645}$$

$$r = 0.95$$

மிகவும் நெருங்கிய நேர் தொடர்பு காணப்படுகிறது.

(ii) பிற்செலவு கோடு

$$Y = \beta_0 + \beta_1 X + E$$

$$\hat{\beta}_1 = \frac{N\sum XY - \left(\sum X\right)\left(\sum Y\right)}{N\sum X^2 - \left(\sum X\right)^2}$$

$$\hat{\beta}_1 = \frac{10[8193] - (200)(400)}{10(4120) - (200)^2}$$

$$\hat{\beta}_1 = \frac{81930 - 80000}{41200 - 40000}$$

$$\hat{\beta}_1 = \frac{1930}{1200}$$

$$\hat{\beta}_1 = 1.608 = 1.61$$

$$\hat{\beta}_0 = \overline{Y} - \hat{\beta}_1 \overline{X}$$

$$\hat{\beta}_0 = 40 - (1.608)20$$

$$\hat{\beta}_0 = 40 - 32.16 = 7.84$$

பிற்செலவுக் கோட்டின் சமன்பாடு : $\hat{y} = \hat{\beta}_0 + \hat{\beta}_1 X$

$$\hat{y} = 7.84 + 1.608X$$

(iii) துணிதற் குணகம் :

$$R^2 = (0.947)^2 = 0.896 \simeq 0.90$$

அல்லது

$$R^2 = \hat{\beta}_1^2 \left[\frac{n\sum X^2 - \left(\sum X\right)^2}{n\sum Y^2 - \left(\sum Y\right)^2}\right]$$

விற்பனையின் மாறலில் 90% ஐ பரீட்சை புள்ளிகள் விளக்குகின்றது.

(iv) வெட்டுப் புள்ளி :

$$\hat{Y} = 7.8 + 1.61X$$

$$30 = 7.8 + 1.61\text{X}$$

$$30 - 7.8 = 1.61\text{X}$$

$$22.2/1.61 \quad 13.78$$

$$\text{X} \quad 13.8$$

$$\text{X} \quad 14$$

விற்பனையாளர் ஒருவரை நீக்குவதற்கு கருத்தில் கொள்ள வேண்டிய பரீட்சை புள்ளி 14

(ஆ) கீழே தரப்பட்ட ஒவ்வொரு சோடிப்பதங்களுக்கிடையிலான வேறுபாட்டினை விளக்குக.
(i) சந்தர்ப்ப மாறல், சாட்டக்கூடிய மாறல்
(ii) செய்முறைக் கட்டுப்பாடு, உற்பத்திக் கட்டுப்பாடு (04 புள்ளிகள்)

(i) **சந்தர்ப்ப மாறல்**

ஒரு உற்பத்தி செய்முறையில் உற்பத்தி மேற்கொள்ளும் போது உற்பத்தியின் தரத்தில் எழுமாறாக நிகழ்கின்ற மாறல் சந்தர்ப்ப மாறல் எனப்படும். இம் மாறலுக்கான காரணங்கள் இனங்காணபட முடியாதவையாகும் . ஆகவே கட்டுப்படுத்த முடியாததாகவும் இருக்கும்.

உதாரணம் :

வெப்பநிலையில் ஏற்படும் மாறல் எழுமாறான காரணங்கள் ஒன்றில் ஒன்று சாராதன இத்தகைய மாறல்கள் தவிர்க்க முடியாதவை. இனங்காண முடியாதவை.

**சாட்டக்கூடிய மாறல்**

இனங்காணப்படக்கூடிய காரணங்களால் ஒரு உற்பத்தியின் தரத்தில் ஏற்படும் மாறல்கள் ஆகவே மாறலுக்கான காரணங்களை இனங்கண்டு சீரமைக்கப்பட முடியும்.

உதாரணம் :

இயந்திரங்களில் ஏற்படும் பிழைகளால் ஏற்படுவது
ஊழியர்கள் களைப்படைவதால் ஏற்படுவது
இயந்திரங்கள் பராமரிப்பின்மையால் ஏற்படுவது
பழுதான மூலப் பொருட்களை பயன்படுத்துவதால் ஏற்படுவது.

(ii) **செய்முறைக் கட்டுப்பாடு**

உற்பத்தி அணைத்து செய்முறையின் போது உற்பத்தி பொருள் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்ட தர நியமத்தினை பூர்த்தி செய்கின்றதா என்பதனை பரிசீலனை செய்தல் செய்முறை கட்டுப்பாடு என அழைக்கப்படும். இதற்காக பயன்படுத்தப்படும் நுட்பமுறை கட்டுப்பாட்டு அட்டவணை எனப்படும். செல–வை குறைபப்தற்கு,கழிவுகளை குறைப்பதற்கு, சூழல் தாக்கங்களை குறைப்பதற்கு, வினைத்திறனை அதிகரிப்பதற்கு, பாதுகாப்பினை உறுதிசெய்வதற்கு இம்முறை பயன்படுத்தப்படும்.

**உற்பத்திக் கட்டுப்பாடு**

உற்பத்தி செயன்முறைகளுக்காக பயன்படுத்தப்படும் மூலபொருட்களும் உற்பத்தி செயன்முறையில் கிடைக்கும் வெளியீட்டு பொருட்களும் குறிப்பிட்ட தரநியமத்திற்கமைய இருக்கின்றதா இல்லையா என்பதனை பரிசீலனை செய்தல் உற்பத்தி கட்டுப்பாடு எனப்படும். இந்த முறை உற்பத்தி செயன்முறையின் பின் மேற்கொள்ளபபடும். விரும்பப்படும் உற்பத்தி பொருளின் தரத்தை பூர்த்தி செய்வதற்கு இந்த முறை உதவும். இதற்காக பயன்படுத்தப்படும் நுட்ப முறை ஏற்றுகொள் மாதிரி எடுப்பு திட்டமாகும்.

(இ) C - அட்டவணைக்கும் U - அட்டவணைக்கும் இடையிலான வேறுபாட்டினை விளக்குக.
உற்பத்தி செய்யப்பட்ட 10 கம்பளி விரிப்புகளில் உள்ள குறைபாடுகளின் எண்ணிக்கையினை பின்வரும் அட்டவணை தருகின்றது.

| விரிப்பு இலக்கம் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| குறைபாடுகளின் எண்ணிக்கை | 2 | 3 | 6 | 5 | 3 | 3 | 6 | 4 | 5 | 3 |

இத்தரவுகளிற்கு ஒரு பொருத்தமான கட்டுப்பாட்டு அட்டவணையை (chart) அமைத்து, சோதனையின் கீழ் பண்பினது தரமானது கட்டுப்பாட்டில் உள்ளதா எனக் கூறுக. (06 புள்ளிகள்)

### C அட்டவணை

உற்பத்தி அளவொன்றின் குறைபாடுகளின் அளவினை கட்டுப்படுத்துவதற்கு பயன்படுத்தப்படுகின்ற ஒரு தரக்கட்டுப்பாட்டு அட்டவணை C அட்டவணை ஆகும்.

$CL = \overline{C}$

$UCL = \overline{C} + 3\sqrt{\overline{C}}$

$UCL = \overline{C} - 3\sqrt{\overline{C}}$

### U அட்டவணை

உற்பத்தி பொருளானது பல கூறுகளை கொண்டுள்ள போது சில கூறுகளைக் கொண்ட உற்பத்தி அலகில் ஒவ்வொரு கூறுகளின் பழுதுகளின் எண்ணிக்கை கட்டுப்படுத்துவதற்கு பயன்படுத்தப்படும் தரக்கட்டுப்பாட்டு அட்டவணை U அட்டவணை ஆகும்.

$CL = \overline{U}$

$UCL = \overline{U} + 3\sqrt{\overline{U}}$

$LCL = \overline{U} - 3\sqrt{\overline{U}}$

$\overline{C} = \frac{\sum C}{K}$

$\overline{C} = \frac{40}{10}$

$CL = \overline{C} = 4$

$UCL = \overline{C} + 3\sqrt{\overline{C}}$

$UCL = 4 + 3\sqrt{4}$

$UCL = 4 + 3 \times 2$

$UCL = 10$

$LCL = \overline{C} - 3\sqrt{\overline{C}}$

$LCL = 4 - 3 \times 2$

$LCL = 4 - 6$

$LCL = -2$

$LCL = 0$




### விளக்கம்

எல்லாப் புள்ளிகளும் C அட்டவணையின் கட்டுப்பாட்டு எல்லைக்குள் இருப்பதால் பண்பின் தரமானது கட்டுப்பாட்டுக்குள் காணப்படும்.

## பகுதி II

**5.** (அ) ஒவ்வொன்றுக்கும் **இரு** வரையறைகள் வீதம் குறிப்பிட்டு, நிகழ்தகவிற்கான பூர்வகால அனுகுமுறையையும் நிகழ்தகவிற்கான சார்பு மீடிறன் அணுகுமுறையையும் விவரிக்குக. (04 புள்ளிகள்)

ஒரு எழுமாற்று பரிசோதனையின் வெளியீடுகள் தம்முள் புறநீக்குவனவாகவும், ஒவ்வொன்றும் சமமான வாய்ப்புக்களை கொண்டும் இருப்பின் குறித்த ஒரு நிகழ்ச்சி நிகழ்வதற்கான நிகழ்தகவு பின்வருமாறு வரையறுக்கப்படும்.
குறித்த நிகழ்ச்சியை A என்க.

$$P(A) = \frac{\text{நிகழ்ச்சி A க்கு சாதகமான வெளியீடுகளின் எண்ணிக்கை}}{\text{சாத்தியமான சம வாய்ப்புள்ள மொத்த வெளியீடுகளின் எண்ணிக்கை}}$$

$$P(A) = \frac{m}{n}$$

இம் முறையின் அடிப்படை எடுகோள் ஒரு எழுமாற்று பரிசோதனையின் வெளியீடுகள் ஒவ்வொன்றும்

1. சமமான வாய்ப்புக்களைக் கொண்டவை.

2. பரிசோதனையின் சாத்தியமான வெளியீடுகளின் எண்ணிக்கை முடிவானதாக (finite) இருக்கும்.

இந்த முறையின் குறைபாடுகள்

1. பரிசோதனையின் வெளியீடுகள் சம வாய்ப்பினை கொண்டிராத போது இந்த முறை பயன்படுத்த முடியாது.

2. எழுமாற்று பரிசோதனையின் மாதிரி வெளி முடிவற்றதாக உள்ள போது இந்த முறையை பயன்படுத்த முடியாது.

**நிகழ்தகவிற்கான சார்பு மீடிறன் அனுகுமுறை**

ஒரு பரிசோதனையானது சீரான நிலைமைகளின் கீழ் அதிக தடவைகள் மீள் மேற்கொள்ளப்படும் போது ஒரு குறித்த நிகழ்ச்சி நிகழும் எண்ணிக்கையானது மொத்த முயல்வுகளின் எண்ணிக்கைக்கு எல்லை சார்பு விகிதமாக காணப்படும். இச் சார்பு விகிதம் அந்நிகழ்ச்சிக்கான நிகழ்தகவு எனப்படும். இதனை பின்வருமாறு எழுதலாம்.

$$P(A) = \lim_{n\to\infty}\left(\frac{n}{N}\right) = P$$

n = குறித்த நிகழ்ச்சி நிகழும் தடவைகள்
N = மொத்த முயலவுகள்

குறைபாடுகள்

1. சீரான நிலைமைகளின் கீழ் பரிசோதனையானது மேற்கொள்ள முடியாவிடின் இந்த முறையை பயன்படுத்த முடியாது.

2. முயல்வுகளின் எண்ணிக்கை வேறுபடும் போது நிகழ்தகவு பெறுமதியானது மாறுபடலாம்.

(ஆ) $P(A)=\frac{1}{2}$ , $P(A\cup B)=\frac{3}{4}$ , $P(B')=\frac{5}{8}$ எனின்,

(i) $P(A'\cap B')$, $P(A'\cup B')$, $P(B\cap A')$ ஆகியவற்றைக் காண்க.

(ii) $A, B$ என்பன சாரா நிகழ்ச்சிகளா எனக் கூறுக. (04 புள்ளிகள்)

$$P(A)=\frac{1}{2}$$

$$P(A\cup B)=\frac{3}{4}$$

$$P(B')=\frac{5}{8}$$

$$P(B)=1-P(B')=1-\frac{5}{8}=\frac{3}{8}$$

$$P(A\cup B)=P(A)+P(B)-P(A\cap B)$$

$$\frac{3}{4}=\frac{1}{2}+\frac{3}{8}-P(A\cap B)$$

$$P(A\cap B)=\frac{1}{2}+\frac{3}{8}-\frac{3}{4}$$

$$P(A\cap B)=\frac{4+3-6}{8}$$

$$P(A\cap B)=\frac{1}{8}$$

(i)

$$P(A'\cap B')=P(\overline{A\cup B})$$

$$P(A'\cap B')=1-P(A\cup B)$$

$$P(A'\cap B')=1-\frac{3}{4}$$

$$P(A'\cap B')=\frac{1}{4}$$

$$P(A'\cup B')=P(\overline{A\cap B})$$

$$P(A'\cup B')=1-P(A\cap B)$$

$$P(A'\cup B')=1-\frac{1}{8}$$

$$P(A'\cup B')=\frac{7}{8}$$

$$P(B\cap A')=P(B)-P(A\cap B)$$

$$P(B\cap A')=\frac{3}{8}-\frac{1}{8}$$

$$P(B\cap A')=\frac{2}{8}=\frac{1}{4}$$

(ii) $P(A)\times P(B)=\frac{1}{2}\times\frac{3}{8}$

$P(A)\times P(B)=\frac{3}{16}$

$P(A\cap B)=\frac{1}{8}$

$P(A\cap B)\neq P(A)\times P(B)$

ஆகவே $A$, $B$ சாரா நிகழ்ச்சிகள் அல்ல.

(இ) ஒரு உற்பத்தி கைத்தொழில் நிறுவனமொன்றில் 5 உற்பத்தி பொறியிலாளர்கள் மற்றும் 3 பராமரிப்பு பொறியியலாளர்கள் ஒரு பகுதியிலும் 4 உற்பத்தி பொறியியலாளர்கள் மற்றும் 5 பராமரிப்பு பொறியியலாளர்கள் மற்றொரு பகுதியிலும் உள்ளனர். இப்பகுதிகளில் ஏதாவது ஒன்றில் இருந்து இரு பொறியிலாளர்கள் ஒன்றாக தெரிவுசெய்யப்படுகின்றார்கள். இருவரில் ஒருவர் உற்பத்தி பொறியிலாளராகவும் மற்றவர் பராமரிப்பு பொறியியலாளராகவும் இருப்பதற்கான நிகழ்தகவைக் காண்க. (04 புள்ளிகள்)

பகுதி I

உற்பத்தி பொறியியலாளர் = 5

பராமரிப்பு பொறியியலாளர் = 3

பகுதி II

உற்பத்தி பொறியியலாளர் = 4

பராமரிப்பு பொறியியலாளர் = 5

ஒருவர் உற்பத்தி பொறியியலாளராகவும் மற்றவர் பராமரிப்பு பொறியியலாளராகவும் இருப்பதற்கான நிகழ்தகவு =

$$=\frac{{}^{9}C_{1}\times{}^{8}C_{1}}{{}^{17}C_{2}}$$

$$=\frac{\frac{9!}{8!\times1!}\times\frac{8!}{7!\times1!}}{\frac{17!}{15!\times2!}}$$

$$=\frac{9\times8}{17\times8}=\frac{72}{136}$$

$$=\frac{9}{17}$$

$$=0.529$$

அல்லது

$$=\frac{1}{2}\left[\frac{{}^{5}C_{1}\times{}^{3}C_{1}}{{}^{8}C_{2}}+\frac{{}^{4}C_{1}\times{}^{5}C_{1}}{{}^{9}C_{2}}\right]$$

$$=\frac{1}{2}\left[\frac{5\times3}{28}+\frac{4\times5}{36}\right]$$

$$=\frac{275}{504}$$

$$=0.546$$

(ஈ) மொத்த நிகழ்தவு விதி, பேய்ஸ் தேற்றம் என்பவற்றை கூறுக.
ஒரு வைத்தியர் நோய் $X$ இனை சரியாக அடையாளம் காண்பதற்கான நிகழ்தகவு $0.8$ ஆகும். அவர் நோயைச் சரியாக அடையாளம் கண்ட பின்பு அவரது சிகிச்சைமுறை மூலம் நோய் $X$ ஐக் கொண்ட நோயாளி இறப்பதற்கான நிகழ்கவு $0.3$ ஆகும். நோய் $X$ இனை உடைய நோயாளி ஒருவர் நோய் சரியாக அடையாளம் காணப்படாமையினால் இறப்பதற்கான நிகழ்தகவு $0.7$ ஆகும். நோய் $X$ இனை உடைய நோயாளி ஒருவர் இறந்துள்ளார் எனின் வைத்தியர்கள் நோய் $X$ இனை சரியாக அடையாளம் கண்டுள்ளார்கள் என்பதற்கான நிகழ்தகவினைக் காண்க. (08 புள்ளிகள்)

மொத்த நிகழ்தகவு விதி

$A_1, A_2$ , ........................., $A_n$ என்பன தம்முள் புறநீக்கும் நிகழ்ச்சிகள் என்க. இவை ஒன்று சேர்ந்து மாதிரி வெளியை உருவாக்குவதாகவும் கருதுக. இங்கு $B$ என்பது ஆகுமாறு $B = \hat{\bigcup_{j=1}} B \cap A_j$ இம்மாதிரி வெளியிலுள்ள ஒரு நிகழ்ச்சி எனின், $B$ நடப்பதற்கான நிகழ்தகவு

$$P(B) = \sum_{j=1}^{n} P(B \cap Aj)$$

$$P(B) = \sum_{j=1}^{n} P(B / A) P(Aj)$$

ஆகும் . இது மொத்த நிகழ்தகவு விதி என அழைக்கப்படும்.

**பேய்ஸ் தேற்றம்**

$A_1, A_2$, .........................., $A_n$ என்பன தம்முள் புறநீக்கும் நிகழ்ச்சிகள் என்க. இவை ஒன்று சேர்ந்து மாதிரி வெ- ளியை உருவாக்குவதாகவும் கருதுக. இங்கு $C$ என்பது $B = \hat{\bigcup_{j=1}} B \cap A_j$ ஆகுமாறு இம்மாதிரி வெளியிலுள்ள ஒரு நிகழ்ச்சி ஆகும். $B$ என்ற நிகழ்ச்சி நிகழ்ந்து விட்டது எனின் $Aj$ நிகழ்ச்சி நிகழ்வது நிகழ்தகவு

$$P(A_j / B) = \frac{P(A_j \cap B)}{P(B_j)}$$

$$P(A_j / B) = \frac{P(A_j).P(B / A_j)}{\sum_{j=1}^{n} P(A_j).P(B / A_j)}$$

என வரையறுக்கப்படும். இதனையே பேய்ல் தேற்றம் என்பர்.

$C$ : நோயினை சரியாக அடையாளம் காணல்.

$D$ : நோயாளி இறந்துள்ளார்.

$$P(C) = 0.8$$

$$P(D / C) = 0.3$$

$$P(D / \overline{C}) = 0.7$$

$$P(D) = P(D / C) P(C) + P(D / \overline{C}) P(\overline{C})$$

$$P(D) = (0.3)(0.8) + (0.7)(0.2)$$

$$P(D) = (0.24) + (0.14)$$

$$P(D) = 0.38$$

$$P(C / D) = \frac{P(C \cap D)}{P(D)}$$

$$P(C / D) = \frac{0.24}{0.38}$$

$$P(C / D) = 0.63$$

**6.** (அ) ஈருறுப்பு பரம்பலின் நிகழ்தகவு சார்பினை கூறுக. இச்சார்பினை பெறுவதற்கு என்ன நிபந்தனைகள் எழுமாற்று பரிசோதனை ஒன்றினால் பூர்த்தி செய்யப்பட வேண்டும்?
ஒரு குறிப்பிட்ட இயந்திரத்தினால் உற்பத்தி செய்யப்படும் ஆணிகளில் பொதுவாக 20% குறைபாடு உடையவை ஆகும். ஆணித் தொகுதியொன்றிலிருந்து எடுக்கப்பட்ட 10 ஆணிகளை கொண்ட எழுமாற்று மாதிரி ஒன்றில் பழுது உடைய ஆணிகள் எதுவும் இல்லை எனில் அத்தொகுதி ஏற்றுக் கொள்ளப்படுவதோடு மாதிரியில் பழுது உடைய ஆணிகள் 3 அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கைகளைக் கொண்டு இருப்பின் அத்தொகுதி நிராகரிக்கப்படும். மற்றைய சந்தர்ப்பங்களில் இரண்டாவது மாதிரி எடுக்கப்படுகின்றது. இரண்டாவது மாதிரி எடுக்கப்படுவதற்கான நிகழ்தகவினைக் காண்க. (06 புள்ளிகள்)

ஈருறுருப்பு பரம்பலின் நிகழ்தகவு சார்பு

$X$ என்பது ஒரு ஈருறுருப்பு எழுமாற்று மாறி என்க. $X$ இனது நிகழ்தகவு திணிவு சார்பு பின்வருமாறு வரையறுக்கப்படும்

$$P(x) = {}^{n}C_{x} P^{x} q^{n-x}; \qquad x = 0,1,2,......,n$$

$x$ = வெற்றிகளின் எண்ணிக்கை

$p$ = வெற்றிக்கான நிகழ்தகவு

$q = 1 - p$ தோல்விக்கான நிகழ்தகவு

$n$ = முயல்வுகளின் எண்ணிக்கை

**ஈருறுருப்பு எழுமாற்று பரிசோதனையினால் பூர்த்திசெய்யப்பட வேண்டிய நிபந்தனைகள்**

1. மீள் செய்யப்படும் பரிசோதனைகளின் எண்ணிக்கை (முயல்வுகளின் எண்ணிக்கை) முடிவானதாகவும் (finite) நிலையானதாகவும் (Fixed) இருக்க வேண்டும்.

2. ஒவ்வொரு முயல்வும் இரு விளைவுகளை வெற்றி (S), தோல்வி ( F ) எனக் கொண்டிருக்க வேண்டும்.

3. வெற்றிக்கான நிகழ்தகவு எல்லா முயல்வுகளுக்கும் சமமானது.

4. முயல்வுகள் ஒன்றையொன்று சாராதன.
   $X$ = பழுதடைந்த ஆணிகளின் எண்ணிக்கை

$P = 0.2$

$n = 10$

$X \sim B(10, 0.2)$

$P(X = x) = {}^{10}C_{x} (0.2)^{x} (0.8)^{10-x}; x = 0,1,2,3......,10$

$x = 0$ எனின் தொகுதி ஏற்றுக்கொள்ளப்படும்

$x \geq 3$ எனின் தொகுதி நிராகரிக்கப்படும்

$0 < x < 3$ எனின் இரண்டாவது மாதிரி எடுக்கப்படும்.

இரண்டாவது மாதிரி எடுக்கப்படுவதற்கான நிகழ்தகவு $= P(X = 1) + P(X = 2)$

$= 0.2684 + 0.3020$

$= 0.5704$

(ஆ) புவசோன் பரம்பலினை வரையறுத்து, இப் பரம்பலை பிரயோகிப்பதற்கான **மூன்று** உதாரணங்களைக் கூறுக.

$T$ நிமிட நீளத்தைக் கொண்ட ஏதாவது நேர ஆயிடையில் தொலைபேசி ஆழிப்பலகை ஒன்றிற்கு கிடைக்கும் தொலைபேசி அழைப்புகளின் எண்ணிக்கையானது இடை $\frac{1}{2}T$ ஐ உடைய புவசோன் பரம்பல் ஒன்றினை கொண்டுள்ளது. தொலைபேசி இயக்குனர் 6 நிமிடங்களுக்கு தொலைபேசி ஆழிப்பலகையை விட்டு விலகியிருக்கின்றார்.

(i) இயக்குனர் ஆழிப்பலகையை விட்டு **விலகியிருக்கும்போது** அழைப்புகள் ஒன்றும் **வரவில்லை** என்பதற்கான நிகழ்தகவினைக் காண்க.

(ii) இயக்குனர் ஆழிப்பலகையை விட்டு **விலகியிருக்கும்போது** மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட அழைப்புகள் வருவதற்கான நிகழ்தகவினைக் காண்க.

(iii) அழைப்புகள் ஒன்றும் பெறப்படாதிருப்பதற்கான நிகழ்தகவு 90% ஆக இருக்கத்தக்க வகையில் இயக்குனர் ஆழிப்பலகையை விட்டு விலகியிருப்பதற்கான ஆகக்கூடிய நேரத்தினை அண்மித்த செக்கனில் காண்க.

$(\log_{10} e = 0.4343,\ \log_{10}(0.90) = -0.0458)$ (06 புள்ளிகள்)

**புவசோன் பரம்பல்**

ஒரு பின்னக எழுமாற்று மாறியானது பின்வரும் நிகழ்தகவு திணிபுச் சார்பினை கொண்டிருப்பின் இம்மாறி புவசோன் பரம்பலைக் கொண்டுள்ளது என அழைக்கப்படும்.

$$P(X = x) = \frac{e^{-\lambda}\lambda^{x}}{x!};\quad x = 0,1,2.........$$

இங்கு $\lambda$ = ஒரு குறிப்பிட்ட கால ஆயிடையில் அல்லது ஒரு அலகு பரப்பில் நிகழும் சராசரி நிகழ்வுகளின் எண்ணிக்கை

e = 2.718

E(x) = $\lambda$

V(x) = $\lambda$

உதாரணம்

1. ஒரு குறித்த நாளின் ஒரு மணித்தியாலத்தில் ஒரு நிமிடத்திற்கு வரும் தொலைபேசி அழைப்புக்களின் எண்ணிக்கை

2. ஒரு வங்கியில் ஒரு நிமிடத்திற்கு வருகை தரும் வாடிக்கையாளர்களது எண்ணிக்கை.

3. ஒரு குறிப்பிட்ட சந்தியில் ஒரு குறித்த மணித்தியாலயத்தில் ஒரு நிமிடத்தில் ஏற்படும் விபத்துக்களின் எண்ணிக்கை

X = ஆளி பலகைக்கு வரும் தொலைபேசி அழைப்புக்களின் எண்ணிக்கை

நேர இடைவெளி = T

$$E(X) = \lambda = \frac{1}{2}T,$$

$$E(X) = \lambda = \frac{1}{2}(6) = 3$$

$$P(X = x) = \frac{e^{-3}3^{x}}{x!};\quad x = 0,1,2,......$$

(i) $$P(x=0)=\frac{e^{-3}3^{0}}{0!}=0.0498$$

(ii) $$P(X\geq 3)=1-\left[P(x=0)+P(x=1)+P(x=2)\right]$$
$$P(X\geq 3)=1-\left[0.0498+0.1494+0.2240\right]$$
$$P(X\geq 3)=1-0.4232$$
$$P(X\geq 3)=0.5768$$

(iii)
$$p(\mathrm{X}=0)=\frac{e^{\frac{-1}{2}T}\left(\frac{-1}{2}T\right)^{0}}{0!}=0.9$$
$$\Rightarrow e^{\frac{-1}{2}T}=0.9$$

$$\log\left[e^{\frac{-1}{2}T}\right]=\log(0.9)$$
$$-\frac{1}{2}T\ \log_{10}[e]=\log_{10}(0.9)$$
$$-\frac{1}{2}T[0.4343]=-0.458$$
$$T=\frac{0.0458}{0.4343}\times 2$$
$$T=\frac{0.0916}{0.4343}$$
$$T=0.2109$$
$$T=0.2109\times 60$$
$$T=12.654$$
$$T\approx 13$$

(இ) புள்ளிவிபரவியலில் செவ்வன் பரம்பலின் **மூன்று** பயன்பாடுகளை விளக்குக.

ஒரு குறிப்பிட்ட வகையான மின்குமிழ்களின் ஆயுட்காலம் ஆனது 500 மணித்தியாலங்கள் இடையையும் 45 மணித்தியாலங்கள் நியமவிலகலையும் உடைய ஒரு செவ்வன் பரம்பலைக் கொண்டுள்ளது. பின்வருவனவற்றைக் காண்க.

(i) ஆகக் குறைந்தது 570 மணித்தியாலங்கள் ஆயுட் காலத்தினை உடைய மின்குமிழ்களின் சதவீதம்

(ii) 485 மணித்தியாலங்களிற்கும் 515 மணித்தியாலங்களிற்கும் இடையில் ஆயுட்காலத்தினை உடைய மின்குமிழ்களின் சதவீம்

(iii) மிகவும் சிறந்த 5% ஆன மின்குமிழ்களின் ஆகக்குறைந்த ஆயுட்காலம் (08 புள்ளிகள்)

**செவ்வன் பரம்பலின் பயன்பாடுகள்**

1. பல கணித உடமைகளை கொண்ட பரம்பல் அதனால் சமூக இயற்கை விஞ்ஞான துறைகளில் பயன்படுத்த முடியும்.

2. மாதிரி பருமன் அதிகரிக்கும் போது செவ்வன் பரம்பலானது (ஈறுருப்பு, புவசோன்) போன்ற பல பின்னக நிகழ்தகவு பரம்பல்களுக்கு ஒரு நல்ல அண்ணளவான பரம்பலாக உள்ளது.

3. அநேக சமூக, இயற்கை தோற்றப்பாடுகள் செவ்வன் பரம்பலில் காணப்படுகின்றன.

4. மைய எல்லைத் தேற்றத்தின் படி குடிவடிவம் தெரியாதவிடத்தும் மாதிரி பருமன் அதிகரிக்கும் போது அக்குடியிலிருந்து எழுமாறாக எடுக்கப்பட்ட மாதிரியின் இடையானது அண்ணளவாக செவ்வன் பரம்பலில் காணப்படும். இந்த உடமை பல புள்ளிவிபர அனுமான சோதனைகளுக்கு உதவுகின்றது.

5. புள்ளிவிபர தரக்கட்டுப்பாட்டு ஆய்வில் பயன்படுகின்றது.

6. குடிபரமானம் தொடர்பான மதிப்பீடுகளுக்கும், கருதுகோள் சோதனைகளுக்கும் உதவுகின்றது.

X = மின்குமிழின் ஆயுட்காலம்

$\mu = 500, \sigma = 45$

$X \sim N(500, 45^2)$

(i) $P(X > 570)$

$= P\left[\frac{X-\mu}{\sigma} > \frac{570-500}{45}\right]$

$= P\left[Z > \frac{70}{45}\right]$

$= P\left[Z > \frac{14}{9}\right]$

$= P[Z > 1.56]$

$= 0.5 - 0.4406$

$= 0.0594$

$= 0.0594 \times 100$

$= 5.94\%$

5.9 வீதமான மின்குமிழ்கள் ஆக குறைந்தது 570 மணித்தியாலங்கள் ஆயுட்காலத்தை கொண்டிருக்கும்.

(ii) $P(485 < X < 515)$

$= P\left[\frac{485-500}{45} < \frac{X-\mu}{\sigma} < \frac{515-500}{45}\right]$

$= P\left[\frac{-15}{45} < Z < \frac{15}{45}\right]$

$= P\left[-\frac{1}{3} < Z < \frac{1}{3}\right]$

$= P[-0.33 < Z < 0.33]$

$= 2P[0 < Z < 0.33]$

$= 2[0.1293]$

$= 0.2586$

$= 0.2586 \times 100$

$= 25.86\%$

(iii) $P(X > a) = 0.05$

$P\left[\frac{X-\mu}{\sigma} > \frac{a-500}{45}\right] = 0.05$

$P\left[Z > \frac{a-500}{45}\right] = 0.05$

$\frac{a-500}{45} = 1.65$

$a = 500 + (1.65)45$

$a = 574.25$

$a = 574$

மிகவும் சிறந்த 5 வீதமான மின்குமிழ்களின் ஆகக் குறைந்த ஆயுட்காலம் 574 மணித்தியாலங்கள் ஆகும்

**7.** (அ) ஒவ்வொரு மாதிரி எடுத்தல் முறைக்கும் **இரு** அனுகூலங்களையும் **இரு** பிரதிகூலங்களையும் குறிப்பிட்டு, பின்வரும் மாதிரி எடுத்தல் முறைகளை விபரிக்குக.

(i) படையாக்கிய எழுமாற்று மாதிரியெடுப்பு

(ii) கொத்து மாதிரியெடுப்பு

(iii) பங்குவீத மாதிரியெடுப்பு

(iv) முறைமையான மாதிரியெடுப்பு (08 புள்ளிகள்)

(i) **படையாக்கிய எழுமாற்று மாதிரியெடுப்பு**

ஒரு குடியானது ஓரின பண்பு அடிப்படையில் பல உப பிரிவுகளாக (படைகளாக) பிரித்து மாதிரி எடுக்கும் முறையாகும். இங்கு ஒவ்வொரு படையிலிருந்தும் எளிய எழுமாற்று மாதிரி எடுப்பு மூலம் மாதிரிகள் எடுக்கப்பட்டு, அவை ஒன்று சேர்க்கப்பட்டு மாதிரி உருவாக்கப்படும்.

**நன்மைகள்**

1. குடியானது மாதிரியினால் நன்றாக பிரதிநிதித்துவம் செய்யப்படுகின்றது.
2. குடியானது அதிக ஓராயமானதாக காணப்படின் இம்முறை மிகவும் பொருத்தமானதாக இருக்கும்.
3. பல பரவல் தன்மையுள்ள குடியிலிருந்து பிரதிநிதித்துவம் செய்யத்தக்க மாதிரியை எடுக்கக் கூடியதாக இருக்கும்.
4. மாதிரியெடுப்பு வழுவானது குறைவாக இருக்கும்.
5. ஒவ்வொரு படைக்கும் சாராத மதிப்புக்களை தயாரிக்க முடியும்.

**குறைபாடுகள்**

1. மாதிரியெடுப்பு சட்டம் இல்லாதவிடத்து இத்தகைய மாதிரி எடுப்பு இயலாததாகும்.
2. செலவு, நேரம், பணம் அதிகமாக தேவைப்படும்.
3. படையாக்கம் சரியாக செய்யப்படாவிட்டால் பெறுபேறுகள் பிழையான முடிவினைத் தரலாம்.

(ii) **கொத்து மாதிரியெடுப்பு**

- குடியானது கொத்துக்களாக காணப்படும் போது இம்முறை பயன்படுத்தப்படும். கொத்துக்கள் தம்முள் ஓரினமாகவும் உள்ளக நிலையில் பல பரவல் தன்மையுடையதாகவும் காணப்படும் போது இம்முறை பயன்படுத்தப்படும்.
  (சந்தைப்படுத்தல் ஆய்வுகளில் இம்முறை அதிகமாக பயன்படுத்தப்படும்.)

- இத்தகைய கொத்துக்களில் ஒரு அல்லது சில கொத்துக்கள் தெரிவு செய்யப்பட்டு எளிய எழுமாற்று மாதிரி எடுப்பு முறை மூலம் மாதிரி தெரிவு செய்யப்படும். இம்முறை மூலம் மாதிரிப்பு திறனை அதிகரித்து செல-வை குறைக்க முடியும் என பொதுவாக நம்பப்படுகின்றது. கொத்துக்களுக்கிடையில் மாறல் குறைவா-கவும், கொத்துக்களுக்குள் மாறல் அதிகமாக காணப்படத்தக்க வகையில் மாதிரி எடுக்கப்பட வேண்டும்.

**நன்மைகள்**

1. மிகவும் நெகிழ்ச்சியுள்ள மாதிரி எடுப்பு முறை
2. செலவு குறைவான முறை
3. குடி இயற்கையாக கொத்துக்களாக ஒழுங்குபடுத்தப்பட்டிருப்பின் மாதிரியெடுப்பு சட்டம் தேவை இல்லை.

**குறைபாடுகள்**

1. மற்றைய மாதிரியெடுப்பு நுட்பங்களுடன் ஒப்பிடும் போது செம்மை குறைந்ததாக உள்ளது.
2. மாதிரியெடுப்பு வழு அதிகம்
3. மாதிரி கோடலானதாகவும் இருக்கலாம்.
4. மற்றைய மாதிரியெடுப்பு முறைகளை விட இம்முறை கூடிய வழுக்களைக் கொண்டிருக்கலாம்.

(iii) **பங்குவீத மாதிரியெடுப்பு**

இது ஒரு நிகழ்தகவு அல்லாத மாதிரியெடுப்பு ஆகும். சில பண்புகள் அடிப்படையில் குடியினை வகைப்படுத்திய பின் ஒவ்வொரு வகையிலிருந்தும் தீர்மானிக்கப்பட்ட எண்ணிக்கைகளாக தெரிவு செய்யும் செய்முறையாகும். ஆய்வு செய்வோரின் விருப்பத்திற்கு அமைய மாதிரி எடுக்கப்படும்.

உதாரணம் :

20 – 30 வயதிற்கு இடைப்பட்டவர்களில் 100 நபர்களை தெரிவு செய்தல்.

**நன்மைகள்**

1. செலவு குறைந்தது.
2. நேரத்தினை சேமிக்க முடியும்.
3. மேற்பார்வை செய்வது இலகுவானது.
4. மாதிரியெடுப்புச் சட்டம் தேவைப்படாது
5. இம் மாதிரி எடுத்தல் முறையானது நிகழ்தகவு மாதிரி எடுத்தல் முறைகளுடன் ஒப்பிடும் போது இலகுவானது.

**குறைபாடுகள்**

1. குறைந்த திட்பத்தினை உடையது.
2. தனிநபர் விருப்பத் தெரிவு கோடல் தன்மைக்கு வழி வகுக்கலாம்.
3. குறைந்த நம்பகத்தன்மை கொண்டது.
4. நிகழ்தகவு அல்லாத மாதிரி எடுப்பு முறையாகையால் மாதிரியெடுப்பு வழுவை கணிப்பது இயலாது.

(iv) **முறைமையான மாதிரியெடுப்பு**

ஒரு வரிசைப்படுத்தப்பட்ட மாதிரியெடுப்பு சட்டத்திலிருந்து மாதிரி மூலங்கள் தெரிவு செய்யப்படுகின்ற மாதிரி எடுப்பு முறை முறையான மாதிரியெடுப்பு முறை என்பர். இம்முறையில் N உறுப்புக்கள் உடைய குடியிலிருந்து n உறுப்புக்கள் ஒரு ஒழுங்குவரிசையில் எடுக்கப்படுகின்றது.

**படிமுறை**

1. குடியினது ஒவ்வொரு அலகிற்கும் 1 இருந்து N வரை எண்களை வழங்குக.
2. மாதிரி பருமனை (n) தெரிவு செய்க.
3. குடிபருமனை மாதிரி பருமனால் பிரித்து $= \frac{N}{n} = K$ இனங்காண்க.
4. வரிசைப்படுத்தபடுத்தப்பட்ட குடியிலிருந்து ஒரு அலகினை எழுமாறாகத் தெரிவு செய்க.
4. தெரிவு செய்யப்பட்ட அலகிலிருந்து ஒவ்வொரு Kவது அலகினை குடி மாதிரி எடுப்புச் சட்டத்திலிருந்து தெரிவு செய்க. இவ்வாறு n மூலகங்கள் கொண்ட மாதிரி எடுக்கப்படும்.

**நன்மைகள்**

1. எளிமையானது, விரைவாக எடுக்க முடியும்.
2. செலவு குறைவு
3. நேரம் சேமிக்க முடியும்.

**தீமைகள்**

1. குடி உறுப்புக்கள் கால அடிப்படையில் அல்லது சக்கர வடிவில் வரிசைப்படுத்தப்படின் மாதிரி கோடலானதாக இருக்கலாம்.
2. மாதிரி எடுப்புச் சட்டம் பூரணமற்றதாக இருப்பின் மாதிரி எடுப்பது இயலாததாக இருக்கும்.
3. குடி உறுப்புக்கள் எழுமாறான வரிசையில் இல்லாவிடில் பிரதிநிதித்துவம் சரியாக இருக்காது.

(ஆ) பின்வரும் குடி அமைப்புகள் எவ்வாறு முறைமையான மாதிரி எடுத்தலின் திட்பத்தினை (Precision) பாதிக்கின்றது என விபரிக்குக.

(i) அலகுகள் எழுமாற்று வரிசையில் உள்ள குடி

(ii) நேர்க்கோட்டு போக்கில் உள்ள குடி

(iii) சுழற்சி மாறல்களைக் கொண்ட குடி (06 புள்ளிகள்)

(i) **அலகுகள் எழுமாற்று வரிசையிலுள்ள குடி**

குடி உறுப்புக்கள் எழுமாற்று வரிசையில் உள்ள போது முறைமையான மாதிரியெடுப்பு முறையின் கீழ் ஒரு மதிப்பானின் திட்பமானது எளிய எழுமாற்று மாதிரி எடுப்பு முறையின் கீழ் எடுக்கப்பட்ட மாதிரி மதிப்பானின் திட்டத்திற்கு சமமாக இருக்கும். ஆகவே எளிய எழுமாற்று மாதிரியெடுப்பின் பெறுபேறுகளை முறைமையான மாதிரியெடுப்பு முறையின் கீழ் மாதிரி இடையின் மாறற்றிறனை மதிப்பிடுவதற்கு பயன்படுத்த முடியும்.

(ii) **நேர்கோட்டுப் போக்கிலுள்ள குடி**

குடியானது 1 வது அலகு 2 வது அலகு என ஒழுங்குபடுத்தப்பட்டு ஒவ்வொரு உறுப்பும் ஒவ்வொரு k ஆயிடையில் இருந்து மாதிரிக்குப் பெறப்படின் குடி நேர்கோட்டு போக்கினை பிரதிபலிப்பதாக இருக்கும். இங்கு முறைமையான மாதிரியெடுப்பின் கீழ் மதிப்பான்களின் திட்பமானது எளிய எழுமாற்று மாதிரி எடுப்புத்திட்டத்தின் கீழ் உள்ள மதிப்பான்களின் திட்பத்திலும் அதிகமாக இருக்கும்.

(iii) **சுழற்சி மாறல்களைக் கொண்ட குடி**

குடியானது காலமற்ற பாங்கினை உடையதாக இருப்பின் மதிப்பான்களின் திட்பமானது எளிய எழுமாற்று மாதிரியுடன் ஒப்பிடும் போது முறைமையான மாதிரியெடுப்பு முறையின் கீழ் குறைவாக இருக்கும்.

(இ) (i) மைய எல்லைத் தேற்றத்தைக் கூறுக.
புள்ளிவிபரவியலில் மைய எல்லைத் தேற்றம் ஏன் மிகவும் முக்கியமானதாக கருதப்படுகிறது என விளக்குக.

(ii) இடை $\lambda = 2$ இனை உடைய ஒரு புவசோன் பரம்பலில் இருந்து பருமன் 50 இனை கொண்ட எழுமாற்று மாதிரியொன்று எடுக்கப்படுகின்றது. மாதிரி இடை ஆனது 2.5 இனை விட அதிகமாக இருப்பதற்கான அண்ணளவான நிகழ்தகவினை காண்க. (06 புள்ளிகள்)

(i) **மைய எல்லைத் தேற்றம்**

குடியினது பரம்பல் வடிவம் தெரியாத போதும், $\mu$ இடையினையும் முடிவான மாறற்றிறன் $\sigma^2$ இனையும் கொண்ட ஒரு குடியிலிருந்து எழுமாறாக எடுக்கப்பட்ட $n$ பருமனைக் கொண்ட மாதிரியின் இடையானது மாதிரிப் பருமன் அதிகரிக்கும் போது குடியினது இடை $\mu$ இனை தனது இடையாகவும், $\frac{\sigma^2}{n}$ இனை மாறற்றினாகவும் கொண்டு அண்ணளவாக செவ்வன் பரம்பலைக் கொண்டிருக்கும்.

இதனை பின்வருமாறும் குறிப்பிடலாம்.

$$X \sim \left(\mu, \sigma^2\right)$$

$$\bar{X} \sim N\left(\mu, \frac{\sigma^2}{n}\right) as \quad n \to \infty$$

**மைய எல்லைத் தேற்றத்தின் முக்கியத்துவம்**

குடிப்பரம்பலின் வடிவம் தெரியாதவிடத்து மாதிரிப் புள்ளி விபரங்களைப் பயன்படுத்தி குடிப்பரமானங்கள் பற்றிய அனுமானங்களை ஆய்வு செய்வதற்கு இத்தேற்றம் அனுமதிக்கின்றது.

(ii) **மைய எல்லைத் தேற்றம்**

$n = 50$

$\mu = \lambda = 2$

$\sigma^2 = \lambda = 2$

$\sigma = \sqrt{\lambda} = \sqrt{2}$

$\mu_{\bar{x}} = 2$

$\sigma_{\bar{x}} = \sqrt{\frac{2}{50}}$

$\sigma_{\bar{x}} = \sqrt{\frac{1}{25}} = \frac{1}{5} = 0.2$

$\bar{X} \sim N\left[2, \frac{1}{25}\right]$

$P\left[\bar{X} > 2.5\right]$

$= P\left[Z > \frac{2.5-2}{0.2}\right]$

$= P\left[Z > \frac{0.5}{0.2}\right]$

$= P\left[Z > 2.5\right] = 0.0062$

**8.** (அ) ஒரு புள்ளி மதிப்பானின் கோடலற்ற தன்மை (unbiasedness) மற்றும் திறன் (efficiency) என்பவற்றால் விளங்குவது யாது என விளக்குக.

$\mu$ இடையினையும் $\sigma^2$ மாறற்றினையும் உடைய ஒரு குடியிலிருந்து $\{X_1, X_2, X_3\}$ என்ற எழுமாற்று மாதிரி எடுக்கப்பட்டால் $\hat{\theta}_1 = \frac{X_1 + X_2 + X_3}{3}$ , $\hat{\theta}_2 = \frac{X_1 + 2X_2 + X_3}{4}$ ஆகிய இரு மதிப்பான்களும் $\mu$ இற்கான கோடலற்ற மதிப்பான்கள் எனக் காட்டுக.

இவ் மதிப்பான்களில் மிகவும் திறன்வாய்ந்த மதிப்பான் எது? (06 புள்ளிகள்)

$\theta$ என்பது ஒரு குடியினது பரமானம் எனவும் $\hat{\theta}$ என்பது $\theta$ என்ற பரமானத்தின் புள்ளி மதிப்பான் எனவும் கருதுக. ஒரு புள்ளி மதிப்பானின் கோடலற்ற தன்மை என்பது புள்ளி மதிப்பானின் எதிர்பார்த்த் பெறுமானம் பரமானத்தின் பெறுமானத்திற்கு சமமாக இருப்பின் $\hat{\theta}$ என்பது $\theta$ இனது கோடலற்ற மதிப்பான எனப்படும் இதனை பின்வருமாறு எழுதலாம்.

$E\left(\hat{\theta}\right) = \theta$

**திறன் மதிப்பான்**

$\theta$ என்ற பரமானத்தின் கோடலற்ற இரு புள்ளி மதிப்பான்கள் $\hat{\theta}_1, \hat{\theta}_2$ எனக் கொள்க. இம்மதிப்பான்களின் மாறற்றிறன்கள் முறையே $V\left(\hat{\theta}_1\right), V\left(\hat{\theta}_2\right)$ என்க.

$V\left(\hat{\theta}_1\right) \le V\left(\hat{\theta}_2\right)$ ஆயின் $\hat{\theta}_1$ என்பது $\theta$ வினது திறன் வாய்ந்த மதிப்பான் எனப்படும்.

$X \sim (\mu, \sigma^2)$

$\{x_1, x_2, x_3\}$

$\hat{\theta}_1 = \dfrac{x_1 + x_2 + x_3}{3}$

$\hat{\theta}_2 = \dfrac{x_1 + x_2 + x_3}{4}$

$$E(\hat{\theta}_1) = E\left(\frac{X_1 + X_2 + X_3}{3}\right)$$

$$E(\hat{\theta}_1) = \frac{1}{3}\left[E(X_1) + E(X_2) + E(X_3)\right]$$

$$E(\hat{\theta}_1) = \frac{1}{3}[\mu + \mu + \mu]$$

$E(\hat{\theta}_1) = \dfrac{3}{3}\mu = \mu$ ஆகவே $\hat{\theta}_1$ என்பது கோடலற்றது.

$$\hat{\theta}_2 = \frac{X_1 + 2X_2 + X_3}{4}$$

$$E(\hat{\theta}_2) = E\left[\frac{X_1 + 2X_2 + X_3}{4}\right]$$

$$E(\hat{\theta}_2) = \frac{1}{4}\left[E(X_1) + E(2X_2) + E(X_3)\right]$$

$$E(\hat{\theta}_2) = \frac{1}{4}[\mu + 2\mu + \mu]$$

$$E(\hat{\theta}_2) = \frac{4\mu}{4} = \mu$$

ஆகவே $\hat{\theta}_2$ என்பது இனது கோடலற்ற மதிப்பான் அகும்.

**திறன் தன்மை**

$$V(\hat{\theta}_1) = V\left(\frac{X_1 + X_2 + X_3}{3}\right)$$

$$V(\hat{\theta}_1) = \frac{1}{9}\left(V(X_1) + V(X_2) + V(X_3)\right)$$

$$V(\hat{\theta}_1) = \frac{1}{9}\left(\sigma^2 + \sigma^2 + \sigma^2\right)$$

$$V(\hat{\theta}_1) = \frac{3}{9}\sigma^2 = \frac{1}{3}\sigma^2$$

$$\hat{\theta}_2 = \frac{X_1 + 2X_2 + X_3}{4}$$

$$V(\hat{\theta}_2) = V\left[\frac{X_1 + 2X_2 + X_3}{4}\right]$$

$$V(\hat{\theta}_2) = \frac{1}{16}\left[V(X_1) + 4V(X_2) + V(X_3)\right]$$

$$V(\hat{\theta}_2) = \frac{1}{16}\left[\sigma^2 + 4\sigma^2 + \sigma^2\right]$$

$$V(\hat{\theta}_2) = \frac{6\sigma^2}{16}$$

$$V(\hat{\theta}_2) = \frac{3}{8}\sigma^2$$

ஆகவே $\hat{\theta}_1$ என்பது திறன் வாய்ந்த மதிப்பான் அகும்.

(ஆ) இரு வகையான மின்குமிழ்கள் கொண்ட மாதிரிகள் அதன் ஆயுட்காலத்தைக் காண்பதற்கு சோதிக்கப்பட்டதோடு கீழே காட்டப்பட்டுள்ள பெறுமானங்கள் அவதானிக்கப்பட்டன.

| மின்குமிழ்களின் வகைகள் | உபயோகிக்கப்பட்ட மின்குமிழ்களின் எண்ணிக்கை | மாதிரி இடை (மணித்தியாலங்கள்) | நியம விலகல் |
|---|---|---|---|
| ***A*** | 50 | 2015 | 80 |
| ***B*** | 70 | 2045 | 60 |

(i) ***A*, *B*** மின்குமிழ்களின் இடை ஆயுட்காலங்களின் வித்தியாசத்திற்கான **95%** நம்பிக்கை ஆயிடையை அமைக்குக.

(ii) நம்பிக்கை ஆயிடையை பயன்படுத்தி மின்குமிழ்கள் ***A*, *B*** இன் இடை ஆயுட்காலங்கள் சமமானவை எனும் கருதுகோளை சோதிக்குக. (06 புள்ளிகள்)

| | A | B |
|---|---|---|
| n | 50 | 70 |
| $\overline{X}$ | 2015 | 2045 |
| SD | 80 | 60 |

**நம்பிக்கை ஆயிடை**

$$\left[\overline{X}_n - \overline{X}_B\right] \pm \left[Z_{\frac{\alpha}{z}}\right]\sqrt{\left[\frac{S^2A}{NA} + \frac{S^2B}{nB}\right]}$$

$$\left[2015 - 2045\right] \pm \left[1.96\right]\sqrt{\left[\frac{80^2}{50} + \frac{60^2}{70}\right]}$$

$$\left[-30\right] \pm \left[1.96\right]\sqrt{\left[\frac{6400}{50} + \frac{3600}{70}\right]}$$

$$\left[-30\right] \pm \left[1.96\right]\sqrt{128 + 51.43}$$

$$-30 \pm \left[1.96\right]\sqrt{179.43}$$

$$-30 \pm \left[1.96\right]13.39$$

$$-30 \pm \left[26.24\right]$$

$$= \left(-56.24, -3.76\right)$$

ii. $H_0 : \mu_A = \mu_B$

$H_1 : \mu_A \neq \mu_B$

**விளக்கம்**

சூனியக் கருதுகோள் உண்மையாக உள்ள போது நம்பிக்கை ஆயிடை சூனிய கருதுகோள் பெறுமதியி-னை (பூச்சியத்தினை) உள்ளடக்கவில்லை. ஆகவே சூனிய கருதுகோள் 5 வீத பொருளுண்மை மட்டத்தில் மறுக்கப்படுகின்றது. ஆகவே இது குடி இடைகள் சமம் இல்லை என்ற முடிவிற்கு வரலாம்.

(இ) ***P, Q, R*** எனும் மூன்று நகரங்களில் ஒரு குறிப்பிட்ட பொருளின் விலைகள் கீழ்வரும் அட்டவணையில் தரப்படுகின்றன.

| நகரம் | | |
|---|---|---|
| ***P*** | ***Q*** | ***R*** |
| 14 | 10 | 2 |
| 6 | 8 | 8 |
| 8 | 8 | 6 |
| 12 | 4 | 4 |

$\sum x_{ij}^2 = 804$

மூன்று நகரங்களிலும் பொருட்களின் சராசரி விலைகள் வேறுபடுகின்றதா என 5% பொருண்மை மட்டத்தில் சோதிக்குக. (08 புள்ளிகள்

$H_0 : \mu_P = \mu_Q = \mu_R$

$H_1$ : ஆகக் குறைந்தது ஒரு நகரத்தில் பொருளின் சராசரி விலை மற்றைய நகர்களில் பொருளின் சராசரி விலைகளுக்கு சமப்படவில்லை.

$T = \sum X_P + \sum X_Q + \sum X_R$

$T = 40 + 30 + 20$

$T = 90$

திருத்தக் காரணி $= \frac{T^2}{N}$

$= \frac{90 \times 90}{12} = 675$

$SST = \sum X_P^2 + \sum X_Q^2 + \sum X_R^2 - \frac{T^2}{N}$

$SST = 440 + 244 + 120 - 675$

$SST = 129$

$SSC = \frac{\left(\sum X_p\right)^2}{n} + \frac{\left(\sum X_Q\right)^2}{n} + \frac{\left(\sum X_R\right)^2}{n} - \frac{T^2}{N}$

$SSC = \frac{40 \times 40}{4} + \frac{30 \times 30}{4} + \frac{20 \times 20}{4} - 675$

$SSC = 400 + 225 + 100 - 675$

$SSC = 725 - 675$

$SSC = 50$

$SSE = SST - SSC$

$SSE = 129 - 50$

$SSE = 79$

**மாறற்றிறன் பகுப்பாய்வு அட்டவணை** (Anova Table)

| Source | df | SS | MS | F |
|---|---|---|---|---|
| மாதிரிகளுக்கு இடையில் | K - 1 = 3 - 1 = 2 | SSC = 50 | $MSC = \frac{50}{2} = 25$ | $F = \frac{MSC}{MSE}$ $F = \frac{25}{8.78}$ $F = 2.85$ |
| மாதிரிகளுக்குள் | K (n - 1) = 3 (4 - 1) = 9 | SSE = 79 | $MSE = \frac{79}{9} = 8.78$ | |
| மொத்தம் | M - 1 = 12 - 1 = 11 | | | |

பொருளுண்மை மட்டம் $\alpha = 0.05$

$$= F_{2,9,0.5} = 4.26$$

அவதிப் பெறுமானம் ( CV )

$$TS = F = 2.85$$

சோதனைப் புள்ளி விபரம்

முடிவு

சோதனைப் புள்ளி விபரத்தின் பெறுமதி அவதிப் பெறுமானத்தை விட குறைவாக இருப்பதால் சூனியக் கருதுகோள் மறுக்கப்படவில்லை. ஆகவே நகரங்களின் சராசரி விலைகளில் வேறுபாடு இல்லை என்ற சூனியக் கருதுகோளை 5% பொருளுண்மை மட்டத்தில் மறுப்பதற்கு போதிய சான்றுகள் இல்லை.